# வறுமை நீங்கி..
# வளமை பெற...




## விசு அய்யர்

# நூல் அறிமுகம்

*நூலின் பெயர்* : ***வறுமை நீங்கி வளமை பெற***

*தொகுப்பு ஆசிரியர்* : *விசு அய்யர்*

*எழுத்து* : *11 புள்ளி*

*முதற் பதிப்பு* : *2023*

*உரிமை* : *ஆசிரியருக்கு*

*கணினி அச்சு* : *மணி பதிப்பகம்*

*பக்கம்* : *36*

*மதிப்பு* : *இந்திய ரூபாயில் ரூ.50*

# மதிப்புரை

இந்த நூல் ஆசிரியருக்கு நான் புதியவன் அல்ல. காரணம் திரு.விசுஅய்யர், அவர்கள் எழுதிய முந்தைய புத்தகங்களுக்கு மதிப்புரை வழங்கி உள்ளேன். அது சோதிடம் தொடர்பான புத்தகம் என்பதால் தயக்கம் இல்லாமல் மனதில் தோன்றியதை எழுத முடிந்தது.



**R. Manikandan,** B.Com.
Treasurer, arulalayam

இந்த புத்தகம் திருமுறைகளில் இருந்து குறிப்புகளை சேர்த்து தொகுத்த புத்தகம். இதற்கு மதிப்புரையாக வழங்க (திருமுறை பயிற்சி இல்லாததால்) தயக்கமாக உள்ளது என்றாலும், இந்த நூல் ஆசிரியர், எடுத்து செய்த எண்ணம் எது என்பது புரிந்து கொள்ள முடிகிறது.

ஒரு சிந்தனையை எப்படி லாவகமாக கையாள்வது எப்படி? அந்த சிந்தனையை நடைமுறைக்கு ஏற்ப எடுத்துச் சொல்வது எப்படி? என்பதை இந்த நூலாசிரியர் விசு அய்யர் அவர்கள் நன்கு அறிந்தவர்.

பண வாய்ப்பை தேடி அலைகின்ற மனதிற்கு, ஆறுதல் சொல்வது போல, இறைவழிபாட்டினை அடி ஒட்டி செல்வ வளம் பெற என சைவ திருமுறைகளில் இருந்து, தேவார பதிகங்களை தொகுத்து தினமும் படனம் செய்ய நமக்காக தந்து உதவி உள்ளார்கள்.

நல்ல விஷயங்களை எடுத்துச் சொல்லும் நபர்களே அரிதாகி இருக்கும் இன்றைய சூழலில், மக்கள் நலம் பெறவும், வழிபாட்டின் மூலம் வளம் பெறவும் இந்த நூலாசிரியரின் இந்த முயற்சி பாராட்டத்தக்கது.

இவை அனைத்தும் அழகு தமிழில் இருப்பதால், புதிய தலைமுறைகளுக்கு படிக்க சிரமமாக இருக்க கூடாது என கருதி தேவையான இடங்களில் வார்த்தைகளை பதம் பிரித்து எளிதில்

படிக்கும்படி அமைத்து தந்தது பாராட்டுக்குரியது. ஒவ்வொரு இளைய தலைமுறையும் இதற்கு நன்றி சொல்லும். இறை நம்பிக்கையை இளைய இதயங்களில் ஏற்றி வைத்து, தாய் மொழியை தூக்கி வைத்து, சைவ குரவர்கள் அருளிச் செய்த அருளிப்பாடுகளை படனம் செய்ய ஊக்குவித்து, தொகுத்து தரும் அரும் பெரும் முயற்சிக்கு நூல் ஆசிரியருக்கு நன்றி சொல்வோம்.

மின் நூலாக வெளி வரும் இந்த புத்தகத்தை அமேசான், விக்கிமீடியா, மற்றும் மின் நூலகத்தில் கிடைக்கும் படி செய்து இருப்பது பாராட்டுக்குரியது.

அன்பர்கள் இந்த புத்தகத்தை வாங்கி படித்து பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்த வேண்டும் என அன்புடன் விரும்புகிறேன்..

உங்கள்

**மணிகண்டன்**

*maniiyer73@gmail.com*

# என்னுரை

திருவருள் உள் நின்று உணர்த்துவதால், மனதில் தோன்றுவதை செய்து விடுவது எனது பழக்கம். செய்வதெல்லாம் சரியாக அமைந்து விடுவதால், திருவருளின் திருக்கருணை நம்மை இப்படி செய்ய வைக்கிறது என்பதை பல முறை நன்றியுடன், எண்ணி மகிழ்ந்துள்ளேன்.

எழுத்து எனக்கு தொழில் இல்லை என்றாலும் எழுத தொடங்கிய உடன் என்னையும் அறியாமல் சிந்தனை வந்து விழுகிறது. எனது ஜாதகத்தில் சந்திரன் உச்சம் பெற்று இருப்பதால் என்னையும் அறியாமல் சிந்தனை வந்து விழுகிறது என்று அந்த சோதிட கலையை துணைக்கு அழைத்துக் கொள்கிறேன்.

பணம் இல்லை என்று ஏழ்மையில் இருப்பவர்கள், பணம் இருந்தும் கஞ்ச தனத்தில் வறுமையில் இருப்பவர்கள், பணம் என்ற பேராசையில் ஆயிரம் இருந்தும் வசதிகள் இருந்தும் ஒரு வெறுமையில் இருப்பவர்கள் என அனைவரையும் வறுமையில் இருப்பவர் என்றே தான் நான் குறித்து வைத்து இருக்கிறேன். வறுமை என்பது பற்றாக்குறை மட்டுமல்ல, முறையாக பயன்படுத்த தெரியாமையும் வறுமையே.

இந்த புத்தகத்தில், நால்வர் பெருமக்கள் இறைவனிடம் கேட்டுப் பெற்ற பொற்கிழிகள், பணம் மற்றும் வசதிகள் என அக சான்றாக அமைந்த திருமுறை பாடல்களில் இருந்து தேவார பாடல்களை தொகுத்து நூலாக உங்களுக்கு படைக்கிறேன்.

இந்த தேவார பாடல்களை முடிந்த வரை பண்ணோடு இசைத்து பாடலாம். பண்ணோடு பாட தெரியாதவர்கள் அல்லது வாய் விட்டு சத்தமாக தினமும் காலையிலும் மாலையிலும் (ஒரு வேளை

மட்டுமாவது) பாடி பயிற்சி செய்து கொண்டால், அதுவே பழக்கமாகிவிடும்.

சரி இப்படி பாடுவதால் என்ன பயன்? நான் என்ன கச்சேரியா செய்ய போகிறேன் என்று யோசிப்பவர்களுக்கு ஒரு செய்தி. இந்த தேவார பாடல்கள் இறைவன் திருவருளால் கிடைக்கப்பெற்றவை. அதை இறைவன் செவி மடுத்தவைகள். இந்த தமிழ் பாடலுக்கு உயிர் உண்டு என்பதை முதலில் புரிந்து கொள்ளுங்கள்.

ஒரு நீதி மன்றத்தில் வழக்குக்கு சம்பந்தப்பட்டவர்கள் வழக்கு பற்றிய முழு விவரம் அறிந்து இருந்தும் வழக்கறிஞர் மூலமாக தான் நீதிமன்றத்தில் வழக்கை present செய்வார்கள் இல்லையா. அவர்களுக்கு தான் நீதி மன்ற வழிமுறைகள் தெரியும் என்பதால் நமது வழக்குகளை நாம் தெரிவித்தபடி அதை வழக்கறிஞர் பதிவு செய்வார்.

அது போல, இறைவனிடம் எப்படி முறையிட்டு வேண்டி, வேண்டுவதை பெறுவது என்பதை சொல்லி தருபவர் நால்வர் பெருமக்கள். அதனால் அவர்கள் பாடி பெற்ற பொன்னும் பொருளும், பெற்றது போல, நாமும் நமக்கும், நம்மை சேர்ந்தவர்களுக்கும் பெற அவர்கள் பாடிய வண்ணம் நாமும் பாட நமக்கும் கிடைக்கும் என்ற உறுதியான நம்பிக்கையில் பாடினால், வறுமை நீங்கி வளமை நிச்சயம் மலரும் என்பதில் ஒரு சதவீதம் கூட ஐயம் கொள்ள தேவையில்லை.

சைவ துறையில் சுமார் 25 ஆண்டுகளுக்கு மேலாக அடியேனை ஈடுபடுத்தி, பாடம் சொல்லி தந்த எனது அன்புக்குரிய பேராசிரியர், திருவாவடுதுறை ஆதின சைவ சித்தாந்த பயிற்சி மையத்தின் முன்னாள் இயக்குனர், நினைவில் வாழும், “சித்தாந்த சாகரம்”, “மெய்ஞான வள்ளல்”, சிவ.திரு.**கு.வைத்தியநாத ஈசான தேசிகர்** அவர்களை, நன்றியோடு நெஞ்சம் நெகிழ மனம், மெய், மொழிகளால் வணங்கி பணிகிறேன்.

இந்த முயற்சியில் ஊக்கப்படுத்திய வாசக அன்பர்களுக்கும், எனது அன்புள்ளங்களுக்கும் நெஞ்சம் நிறைந்த நன்றிகளை பதிவு செய்கிறேன்.

இந்த நூல் வடிவமைப்பிலும், மின் நூலாக பதிப்பித்து தந்ததிலும் தன் ஆர்வத்தையும் நேரத்தையும் முழுமையாக நமக்காக தந்த **மணி பதிப்பகத்தாருக்கு** நெஞ்சம் நிறைந்த நன்றிகளை பதிவு செய்கிறேன்.

எனது அன்பு வேண்டுகோளை ஏற்று நூலிற்கு மதிப்புரை தந்த அருளாலயம் அமைப்பின் பொருளாளர் மும்பை திரு.**மணிகண்டன்,** அவர்களுக்கு நெஞ்சம் நெகிழ்ந்த நன்றியையும் வாழ்த்துக்களையும் பதிவு செய்கிறேன்.

இந்த நூல் அமேசான், விக்கி மீடியா மற்றும் மின் நூலகம் போன்ற தளங்களில் கிடைக்கும். 30க்கும் மேற்பட்ட நாடுகளில் வாசகர்களை கொண்ட channel G என்ற podcastல் ஆசிரியரின் நிகழ்ச்சிகளை கேட்டு ஊக்கப்படுத்துங்கள்.

வாசகர்களின் அன்பு ஆதாரவுக்கு மீண்டும் ஒரு முறை இரு கரம் கூப்பி, நன்றிகளை பதிவு செய்து எல்லோரும் நலம் பெற்று வாழ இறைஅருளை வேண்டி நிற்கிறேன்.

நல்லதே நினைப்போம். நல்லதே நடக்கும்.

பேரன்புடன்

**விசு அய்யர்**

iyervisuiyer@gmail.com

திருஞானசம்பந்தர் அருளிய தேவாரம் 3ம் திருமுறை
பண்: காந்தார பஞ்சமம் தலம்: திருவாவடுதுறை.
திருச்சிற்றம்பலம்

இடரினும் தளரினும் எனது உறுநோய்
தொடரினும் உனகழல் தொழுது எழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்தநஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே

இதுவோஎமை ஆளுமாறு
ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள்
ஆவடு துறை அரனே....1

வாழினுஞ் சாவினும் வருந்தினும்போய்
வீழினும் உனகழல் விடுவேன் அல்லேன்
தாழ் இளந் தடம்புனல் தயங்குசென்னிப்
போழ் இள மதிவைத்த புண்ணியனே

இதுவோஎமை ஆளுமாறு
ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள்
ஆவடு துறை அரனே....2

நனவினுங் கனவினும் நம்பா உன்னை
மனவினும் வழிபடல் மறவேன்அம்மான்
புனல்விரி நறுங்கொன்றைப் போது அணிந்த
கனல் எரி அனல்புல்கு கையவனே

இதுவோஎமை ஆளுமாறு
ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள்
ஆவடு துறை அரனே....3

தும்மலோடு அருந்துயர் தோன்றிடினும்
அம் மலர் அடியலால் அரற்றாது என்நா
கைம்மல்கு வரிசிலைக் கணை ஒன்றினால்
மும்மதிள் எரி எழ முனிந்தவனே

இதுவோஎமை ஆளுமாறு
ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள்
ஆவடு துறை அரனே....4

கையது வீழினுங் கழிவு உறினுஞ்
செய்கழல் அடியலால் சிந்தைசெய்யேன்
கொய்யணி நறுமலர் குலாயசென்னி
மையணி மிடறு உடை மறையவனே

இதுவோஎமை ஆளுமாறு
ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள்
ஆவடு துறை அரனே....5

வெந்துயர் தோன்றி ஓர் வெரு உறினும்
எந்தாய் உன் அடியலால் ஏத்தாது என்நா
ஐந்தலை அரவு கொண்டு அரைக்கு அசைத்த
சந்தவெண் பொடி அணி சங்கரனே

இதுவோஎமை ஆளுமாறு
ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள்
ஆவடு துறை அரனே....6

வெப்பொடு விரவி ஓர் வினைவரினும்
அப்பா உன் அடியலால் அரற்றாது என்நா
ஒப்புடை ஒருவனை உருஅழிய
அப்படி அழல் எழ விழித்தவனே

இதுவோஎமை ஆளுமாறு
ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள்
ஆவடு துறை அரனே....7

பேர் இடர் பெருகி ஓர் பிணிவரினுஞ்
சீருடைக் கழலலாற் சிந்தைசெய்யேன்
ஏருடை மணிமுடி இராவணனை
ஆரிடர் படவரை அடர்த்தவனே

இதுவோஎமை ஆளுமாறு
ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள்
ஆவடு துறை அரனே........8

உண்ணினும் பசிப்பினும் உறங்கினும்நின்
ஒண்மலர் அடியலால் உரையாது என்நா
கண்ணனுங் கடிகமழ் தாமரைமேல்
அண்ணலும் அளப்பரிது ஆயவனே

இதுவோஎமை ஆளுமாறு
ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள்
ஆவடு துறை அரனே........9

பித்தொடு மயங்கி ஓர் பிணிவரினும்
அத்தா உன் அடியலால் அரற்றாது என்நா
புத்தருஞ் சமணரும் புறன் உரைக்கப்
பத்தர்கட்கு அருள்செய்து பயின்றவனே

இதுவோஎமை ஆளுமாறு
ஈவது ஒன்று எமக்கு இல்லையேல்
அதுவோ உனது இன் அருள்
ஆவடு துறை அரனே....10

அலைபுனல் ஆவடு துறை அமர்ந்த
இலைநுனை வேற்படை எம் இறையை
நலம்மிகு ஞானசம் பந்தன்சொன்ன
விலையுடை அருந்தமிழ் மாலைவல்லார்
வினை ஆயின நீங்கிப்போய்
விண்ணவர் வியன் உலகம்
நிலையாக முன்னேறுவர்
நிலமிசை நிலை இலரே....11

திருச்சிற்றம்பலம்

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய தேவாரம் 7ம் திருமுறை

பண்: தக்கேசி தலம்: திருமுதுகுன்றம்

திருச்சிற்றம்பலம்

மெய்யை முற்றப் பொடிப் பூசி ஓர் நம்பி,
வேதம் நான்கும் விரித்து ஓதி ஓர் நம்பி,
கையில் ஓர் வெண் மழு ஏந்தி ஓர் நம்பி,
கண்ணு மூன்றும் உடையாய் ஒரு நம்பி,
செய்ய நம்பி, சிறு செஞ்சடை நம்பி,
திரிபுரம் தீ எழச் செற்றது ஓர் வில்லால்
எய்த நம்பி, என்னை ஆள் உடை நம்பி
எழு பிறப்பும் எங்கள் நம்பி கண்டாயே ....1

திங்கள் நம்பி, முடிமேல்; அடியார் பால் சிறந்த நம்பி;
பிறந்த உயிர்க்கு எல்லாம்
அம் கண் நம்பி; அருள் மால் விசும்பு ஆளும்
அமரர் நம்பி; குமரன் முதல்-தேவர்-
தங்கள் நம்பி; தவத்துக்கு ஒரு நம்பி;
“தாதை” என்று உன் சரண் பணிந்து ஏத்தும்
எங்கள் நம்பி; என்னை ஆள் உடை நம்பி
எழுபிறப்பும் எங்கள் நம்பி கண்டாயே .....2

வருந்த அன்று மதயானை உரித்த வழக்கு நம்பி,
முழக்கும் கடல் நஞ்சம்
அருந்தும் நம்பி, அமரர்க்கு அமுது ஈந்த அருள் என் நம்பி,
பொருளால் வரு நட்டம்
புரிந்த நம்பி, புரிநூல் உடை நம்பி,
பொழுதும் விண்ணும் முழுதும் பல ஆகி
இருந்த நம்பி, என்னை ஆள் உடை நம்பி
எழு பிறப்பும் எங்கள் நம்பி கண்டாயே .....3

ஊறும் நம்பி அமுதா; உயிர்க்கு எல்லாம் உரிய நம்பி;
தெரியும் மறை அங்கம்,
கூறும் நம்பி, முனிவர்க்கு; அருங்கூற்றைக் குமைத்த நம்பி;
குமையாப் புலன் ஐந்தும்
சீறும் நம்பி; திரு வெள்ளடை நம்பி;
செங்கண் வெள்ளைச் செழுங் கோட்டு எருது என்றும்
ஏறும் நம்பி; என்னை ஆள் உடை நம்பி
எழுபிறப்பும் எங்கள் நம்பி கண்டாயே ..... 4

“குற்ற நம்பி, குறுகார் எயில் மூன்றை, குலைத்த நம்பி,
சிலையா வரை கையில்
பற்றும் நம்பி, பரமானந்த வெள்ளம் பணிக்கும் நம்பி”
எனப் பாடுதல் அல்லால்
மற்று நம்பி! உனக்கு என் செய வல்லேன்?
மதியிலேன் படு வெந்துயர் எல்லாம்
எற்றும் நம்பி, என்னை ஆள் உடை நம்பி
எழு பிறப்பும் எங்கள் நம்பி கண்டாயே ....5

அரித்த நம்பி, அடி கை தொழுவார் நோய்; ஆண்ட நம்பி,
முன்னை; ஈண்டு உலகங்கள்
தெரித்த நம்பி; ஒரு சே உடை நம்பி;
சில்பலிக்கு என்று அகம் தோறும் மெய் வேடம்
தரித்த நம்பி; சமயங்களின் நம்பி;
தக்கன் தன் வேள்வி புக்கு அன்று இமையோரை
இரித்த நம்பி; என்னை ஆள் உடை நம்பி
எழுபிறப்பும் எங்கள் நம்பி கண்டாயே .... 6

பின்னை நம்பும் புயத்தான் நெடுமாலும் பிரமனும்
என்று இவர் நாடியும் காணா

உன்னை நம்பி! ஒருவர்க்கு எய்தல் ஆமே,
உலகு நம்பி உரை செய்யுமது அல்லால்?
முன்னை நம்பி; பின்னும் வார் சடை நம்பி;
முழுது இவை இத்தனையும் தொகுத்து ஆண்டது
என்னை? நம்பி! எம்பிரான் ஆய நம்பி
எழுபிறப்பும் எங்கள் நம்பி கண்டாயே .... 7

சொல்லை நம்பி; பொருள் ஆய் நின்ற நம்பி;
தோற்றம், ஈறு, முதல், ஆகிய நம்பி;
வல்லை நம்பி, அடியார்க்கு அருள் செய்ய; வருந்தி நம்பி
உனக்கு ஆட்செய கில்லார்
அல்லல் நம்பி! படுகின்றது என்? நாடி
அணங்கு ஒருபாகம் வைத்து, எண் கணம் போற்ற,
இல்லம் நம்பி இடு பிச்சை கொள் நம்பி
எழுபிறப்பும் எங்கள் நம்பி கண்டாயே .... 8

“காண்டும், நம்பி கழல் சேவடி” என்றும் கலந்து
உனைக் காதலித்து ஆட் செய்கிற்பாரை
ஆண்டு நம்பி அவர் முன்கதி சேர அருளும் நம்பி;
குரு மாப் பிறை பாம்பைத்
தீண்டும் நம்பி; சென்னியில் கன்னி தங்கத் திருத்தும் நம்பி;
பொய்ச் சமண் பொருள் ஆகி
ஈண்டும் நம்பி; இமையோர் தொழும் நம்பி
எழுபிறப்பும் எங்கள் நம்பி கண்டாயே .... 9

கரக்கும் நம்பி, கசியாதவர் தம்மை;
கசிந்தவர்க்கு இம்மையொடு அம்மையில் இன்பம்
பெருக்கும் நம்பி; பெருகக் கருத்தா.. ........ 10

திருச்சிற்றம்பலம்

திருஞானசம்பந்தர் அருளிய தேவாரம் 1ம் திருமுறை

பண்: குறிஞ்சி தலம்: திருவீழிமிழலை

திருச்சிற்றம்பலம்

வாசி தீரவே, காசு நல்குவீர்
மாசின் மிழலையீர், ஏசல் இல்லையே

இறைவர் ஆயினீர், மறைகொள் மிழலையீர்
கறைகொள் காசினை, முறைமை நல்குமே.

செய்ய மேனியீர், மெய்கொள் மிழலையீர்
பைகொள் அரவினீர், உய்ய நல்குமே.

நீறு பூசினீர், ஏறு அது ஏறினீர்
கூறு மிழலையீர், பேறும் அருளுமே.

காமன் வேவ ஓர், தூமக் கண்ணினீர்
நாம மிழலையீர், சேமம் நல்குமே.

பிணிகொள் சடையினீர், மணிகொள் மிடறினீர்
அணிகொள் மிழலையீர், பணிகொண்டு அருளுமே.

மங்கை பங்கினீர், துங்க மிழலையீர்
கங்கை முடியினீர், சங்கை தவிர்மினே.

அரக்கன் நெரிதர, இரக்கம் எய்தினீர்
பரக்கு மிழலையீர், கரக்கை தவிர்மினே.

அயனும் மாலுமாய், முயலும் முடியினீர்
இயலும் மிழலையீர், பயனும் அருளுமே.

பறிகொள் தலையினார், அறிவது அறிகிலார்
வெறிகொள் மிழலையீர், பிரிவது அரியதே.

காழி மாநகர், வாழி சம்பந்தன்
வீழி மிழலைமேல், தாழும் மொழிகளே.

திருச்சிற்றம்பலம்

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய தேவாரம் 7ம் திருமுறை

பண்: நட்ட ராகம் தலம்: திருமுதுகுன்றம்

திருச்சிற்றம்பலம்

பாடல் எண் : 1

பொன்செய்த மேனியினீர் புலித் தோலை அரைக்கு அசைத்தீர்
முன்செய்த மூஎயிலும் எரித்தீர் முதுகுன்றம் அமர்ந்தீர்
மின்செய்த நுண் இடையாள் பரவை இவள் தன்முகப்பே
என்செய்த வாறு அடிகேள் அடி யேன் இட் டளங்கெடவே.

பாடல் எண் : 2

உம்பரும் வானவரும் உடனே நிற்கவே எனக்குச்
செம்பொனைத் தந்து அருளித் திகழும் முதுகுன்றம் அமர்ந்தீர்
வம்பு அமருங் குழலாள் பரவை இவள் வாடுகின்றாள்
எம் பெருமான் அருளீர் அடியேன் இட்டளங்கெடவே.

பாடல் எண் : 3

பத்தா பத்தர்களுக்கு அருள் செய்யும் பரம்பரனே
முத்தா முக்கணனே முதுகுன்றம் அமர்ந்தவனே
மைத்தாரும் தடங்கண் பரவை இவள் வாடாமே
அத்தா தந்து அருளாய் அடியேன் இட்டளங்கெடவே.

பாடல் எண் : 4

மங்கை ஓர் கூறு அமர்ந்தீர் மறை நான்கும் விரித்து உகந்தீர்
திங்கள் சடைக்கு அணிந்தீர் திகழும் முதுகுன்றம் அமர்ந்தீர்

கொங்கை நல்லாள் பரவை குணங் கொண்டு இருந்தாள் முகப்பே
அங்கணனே அருளாய் அடியேன் இட்டளங்கெடவே.

பாடல் எண் : 5

மையாரும் மிடற்றாய் மருவார் புரம் மூன்று எரித்த
செய்யார் மேனியனே திகழும் முதுகுன்றம் அமர்ந்தாய்
பையாரும் அரவே ரல்குலால் இவள் வாடுகின்றாள்
ஐயா தந்து அருளாய் அடியேன் இட்டளங்கெடவே.

பாடல் எண் : 6

நெடியான் நான்முகனும் இரவி யொடும் இந்திரனும்
முடியால் வந்து இறைஞ்ச முதுகுன்றம் அமர்ந்தவனே
படியாரும் இயலாள் பரவை இவள் தன்முகப்பே
அடிகேள் தந்து அருளீர் அடியேன் இட்டளங்கெடவே.

பாடல் எண் : 7

கொந்தணவும் பொழில் சூழ் குளிர் மாமதில் மாளிகைமேல்
வந்தணவும் மதிசேர் சடை மாமுது குன்று உடையாய்
பந்தணவும் விரலாள் பரவை இவள் தன்முகப்பே
அந்தணனே அருளாய் அடியேன் இட்டளங்கெடவே.

பாடல் எண் : 8

பரசாருங் கரவா பதினெண் கணமும் சூழ
முரசார் வந்து எதிர முதுகுன்றம் அமர்ந்தவனே
விரைசேருங் குழலாள் பரவை இவள் தன்முகப்பே
அரசே தந்து அருளாய் அடியேன் இட்டளங்கெடவே.

பாடல் எண் : 9

ஏத்தாது இருந்து அறியேன் இமையோர் தனி நாயகனே
மூத்தாய் உலகுக்கு எல்லா முதுகுன்றம் அமர்ந்தவனே
பூத்தாருங் குழலாள் பரவை இவள் தன்முகப்பே
கூத்தா தந்தருளாய் கொடியேன் இட்டளங்கெடவே.

பாடல் எண் : 10

பிறையாரும் சடை எம்பெருமான் அருளா என்று
முறையால் வந்து அமரர் வணங்கும் முதுகுன்றர்தம்மை
மறையார் தம் குரிசில் வயல் நாவல் ஆரூரன்சொன்ன
இறையார் பாடல் வல்லார்க்கு எளிதாம் சிவலோகம் அதே.

திருச்சிற்றம்பலம்

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிய தேவாரம் 7ம் திருமுறை

பண்: இந்தளம் தலம்: திருஓணகாந்தன்தளி

திருச்சிற்றம்பலம்

பாடல் எண் : 1

நெய்யும் பாலும் தயிரும் கொண்டு
நித்தல் பூசனை செய்யல் உற்றார்,
கையில் ஒன்றும் காணம் இல்லைக்
கழல் அடிதொழுது உய்யின் அல்லால்,
ஐவர் கொண்டுஇங்கு ஆட்ட ஆடி,
ஆழ்கு ழிப்பட்டு அழுந்து வேனுக்கு,
உய்யு மாறுஒன்று அருளிச் செய்யீர்,
ஓண காந்தன் தளி உளீரே.

பாடல் எண் : 2

திங்கள் தங்கு சடையின் மேலோர்
திரைகள் வந்து புரள வீசும்
கங்கை யாளேல் வாய்தி றவாள்,
கணப தியேல் வயிறு தாரி,
அங்கை வேலோன் குமரன் பிள்ளை,
தேவி யார்கோல் தட்டி ஆளார்,
உங்க ளுக்குஆட் செய்ய மாட்டோம்
ஓண காந்தன் தளியு ளீரே.

பாடல் எண் : 3

பெற்ற போழ்தும் பெறாத போழ்தும்
பேணி உம்கழல் ஏத்து வார்கள்
மற்றுஓர் பற்றுஇலர் என்று இரங்கி,
மதியு டையவர் செய்கை செய்யீர்,
அற்ற போழ்தும் அலந்த போழ்தும்
ஆவற் காலத்து அடிகேள் உம்மை
ஒற்றி வைத்துஇங்கு உண்ண லாமோ
ஓண காந்தன் தளி உளீரே.

பாடல் எண் : 4

வல்லது எல்லாம் சொல்லி உம்மை
வாழ்த்தி னாலும், வாய்தி றந்து, ஒன்று
இல்லை என்னீர், உண்டும் என்னீர்,
எம்மை ஆள்வான் இருப்பது என்நீர்,
பல்லை உக்க படுத லையில்
பகல்எ லாம்போய்ப் பலிதி ரிந்துஇங்கு
ஒல்லை வாழ்க்கை ஒழிய மாட்டீர்
ஓண காந்தன் தளி உளீரே.

பாடல் எண் : 5

கூடிக் கூடித் தொண்டர் தங்கள்
கொண்ட பாணி குறைப டாமே
ஆடிப் பாடி அழுது நெக்குஅங்கு,
அன்பு உடையவர்க்கு இன்பம் ஓரீர்,

தேடித் தேடித் திரிந்துஎய்த் தாலும்
சித்தம் என்பால் வைக்க மாட்டீர்,
ஓடிப் போகீர் பற்றும் தாரீர்,
ஓண காந்தன் தளி உளீரே.

பாடல் எண் : 6

வார்இ ருங்குழல் வாள்நெ டுங்கண்
மலைம கள்மது விம்மு கொன்றைத்
தார்இ ருந்தட மார்பு நீங்காத்
தைய லாள்,உலகு உய்ய வைத்த
கார்இ ரும்பொழில் கச்சி மூதூர்க்
காமக் கோட்டம்உண் டாக, நீர்போய்
ஊர்இ டும்பிச்சை கொள்வது என்னே,
ஓண காந்தன் தளி உளீரே.

பாடல் எண் : 7

பொய்ம்மை யாலே போது போக்கிப்
புறத்தும் இல்லை, அகத்தும் இல்லை,
மெய்ம்மை சொல்லி ஆள மாட்டீர்,
மேலை நாள்ஒன்று இடவும் கில்லீர்,
எம்மைப் பெற்றால் ஏதும் வேண்டீர்,
ஏதுந் தாரீர் ஏதும் ஓதீர்,
உம்மை அன்றே எம்பெரு மான்
ஓண காந்தன் தளி உளீரே.

பாடல் எண் : 8

வலையம் வைத்த கூற்றம் மீவான்
வந்து நின்ற வார்த்தை கேட்டு,
சிலைஅ மைத்த சிந்தை யாலே
திருவடி தொழுது உய்யின் அல்லால்,
கலை அமைத்த காமச் செற்றக்
குரோத லோப மதவ ரூடை
உலை அமைத்து, இங்கு ஒன்ற மாட்டேன்
ஓண காந்தன் தளி உளீரே.

பாடல் எண் : 9

வார மாகித் திருவ டிக்குப்
பணிசெய் தொண்டர் பெறுவது என்னே,
ஆரம் பாம்பு, வாழ்வது ஆர்ஊர்,
ஒற்றி யூரேல் உம்மது அன்று,
தார மாகக் கங்கை யாளைச்
சடையில் வைத்த அடிகேள், உந்தம்
ஊரும் காடு, உடையும் தோலே,
ஓண காந்தன் தளி உளீரே.

பாடல் எண் : 10

ஓவணம்மேல் எருதுஒன்று ஏறும்
ஓண காந்தன் தளி உளார்தாம்
ஆவணஞ்செய்து ஆளும் கொண்ட,
அரைதுகில்லொடு பட்டு வீக்கிக்

கோவணம் மேற் கொண்ட வேடம்,
கோவையாக ஆரூரன் சொன்ன
பாவணத் தமிழ் பத்தும் வல்லார்க்கு,
பறையுந் தாம்செய்த பாவம் தானே.

திருச்சிற்றம்பலம்

சுந்தர மூர்த்தி சுவாமிகள் அருளிய தேவாரம் 7ம் திருமுறை

பண்: கொல்லி தலம்: திருப்புகலூர்

திருச்சிற்றம்பலம்

பாடல் எண் : 1

தம்மை யேபுகழ்ந்து இச்சை பேசினுஞ்
சார்கி னுந்தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடா தே எந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மை யேதருஞ் சோறுங் கூறையும்
ஏத்த லாம்இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுறவு இல்லையே.

பாடல் எண் : 2

மிடுக்கு இலாதானை வீமனே விறல்
விசயனே வில்லுக்கு இவன் என்று
கொடுக்கிலாதானைப் பாரியே என்று
கூறினும் கொடுப்பார் இலை
பொடிக்கொள் மேனி எம் புண்ணியன்
புகலூரைப் பாடுமின் புலவீர்காள்
அடுக்கு மேல் அமர் உலகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுறவு இல்லையே.

பாடல் எண் : 3

காணி யேல் பெரிது உடையனே கற்று
நல்லனே சுற்றம் நன்கிளை
பேணியே விருந்தோம்புமே என்று
பேசினுங் கொடுப்பார் இலை
பூணி பூண்டு உழப்புட் சிலம்புந்தண்
புகலூர் பாடுமின் புலவீர்காள்
ஆணியாய் அமர் உலகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுறவு இல்லையே.

பாடல் எண் : 4

நரைகள் போந்து மெய் தளர்ந்து மூத்து உடல்
நடுங்கி நிற்கும் இக் கிழவனை
வரைகள் போல் திரள் தோள னே என்று
வாழ்த்தினும் கொடுப்பார் இலை
புரை வெள்ளேறு உடைப் புண்ணியன்
புகலூரைப் பாடுமின் புலவீர்காள்
அரையனாய் அமர் உலகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுறவு இல்லையே.

பாடல் எண் : 5

வஞ்ச நெஞ்சனை மா சழக்கனைப்
பாவியை வழக்கு இல்லியைப்
பஞ்ச துட்டனைச் சாதுவே என்று
பாடினுங் கொடுப்பார் இலை

பொன் செய் செஞ்சடைப் புண்ணியன்
புகலூரைப் பாடுமின் புலவீர்காள்
நெஞ்சில் நோய் அறுத்துஞ்சு போவதற்கு
யாதும் ஐயுறவு இல்லையே.

பாடல் எண் : 6

நலம் இலாதானை நல்லனே என்று
நரைத்த மாந்தனை இளையனே
குலம் இலாதானைக் குலவனே என்று
கூறினுங் கொடுப்பார் இலை
புலம் எலாம் வெறி கமழும் பூம்
புகலூரைப் பாடுமின் புலவீர்காள்
அலமராத அமர் உலகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுறவு இல்லையே.

பாடல் எண் : 7

நோயனைத் தடந்தோளனே என்று
நொய்ய மாந்தனை விழுமிய
தாய் அன்றோ புலவோர்க்கு எலாம் என்று
சாற்றினுங் கொடுப்பார் இலை
போய் உழன்று கண்குழியாதே எந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
ஆயம் இன்றிப்போய் அண்டம் ஆள்வதற்கு
யாதும் ஐயுறவு இல்லையே.

பாடல் எண் : 8

எள் விழுந்த இடம் பார்க்கு ஆகிலும்
ஈக்கும் ஈகிலன் ஆகிலும்
வள்ளலே எங்கள் மைந்தனே என்று
வாழ்த்தினுங் கொடுப்பார் இலை
புள் எலாம் சென்று சேரும் பூம்
புகலூரைப் பாடுமின் புலவீர்காள்
அள்ளல் பட்டு அழுந்தாது போவதற்கு
யாதும் ஐயுறவு இல்லையே.

பாடல் எண் : 9

கற்றி லாதானைக் கற்று நல்லனே
காம தேவனை ஒக்குமே
முற்றி லாதானை முற்ற னே என்று
மொழியினுங் கொடுப்பார் இலை
பொத்தில் ஆந்தைகள் பாட்ட றாப்
புகலூரைப் பாடுமின் புலவீர்காள்
அத்தனாய் அமர் உலகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுறவு இல்லையே.

பாடல் எண் : 10

தையலாருக்கு ஒர் காமனே சால
நல் வழக்குடையனே
கை உலாவிய வேலனே என்று
கழறினுங் கொடுப்பார் இலை

பொய்கை ஆவியில் மேதியாய்
புகலூரைப் பாடுமின் புலவீர்காள்
ஐயனாய்அமர் உலகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுறவு இல்லையே.

பாடல் எண் : 11

செறுவி னிற்செழுங் கமலம் ஓங்குதென்
புகலூர் மேவிய செல்வனை
நறவம் பூம்பொழில் நாவ லூரன்
வனப்பகை அப்பன் சடையன் தன்
சிறுவன் வன் தொண்டன் ஊரன் பாடிய
பாடல் பத்து இவை வல்லவர்
அறவ னார் அடி சென்று சேர்வதற்கு
யாதும் ஐயுறவு இல்லையே.

திருச்சிற்றம்பலம்

சுந்தர மூர்த்தி சுவாமிகள் அருளிய தேவாரம் 7ம் திருமுறை

பண்: கொல்லி தலம்: திருப்புகலூர்

திருச்சிற்றம்பலம்

பத்தூர் புக்கு இரந்துண்டு பல பதிகம் பாடிப்
பாவையரைக் கிறி பேசிப் படிறாடித் திரிவீர்
செத்தார் தம் எலும்பணிந்து சேவேறித் திரிவிர்
செல்வத்தை மறைத்து வைத்தீர் எனக்கொரு நாள் இரங்கீர்
முத்தாரம் இலங்கி மிளிர் மணி வயிரக் கோவை
அவை பூணத் தந்தருளீர் மெய்க்கினிதா நாறும்
கத்தூரி கமழ் சாந்து பணித்தருள வேண்டும்
கடல் நாகைக் காரோணம் மேவியிருந்தீரே.

வேம்பினொடு தீம் கரும்பு விரவி எனைத் தீற்றி, விருத்தி நான்
உமை வேண்ட, துருத்தி புக்கு அங்கு இருந்தீர்;
பாம்பினொடு படர் சடைகள் அவை காட்டி வெருட்டிப் பகட்ட நான்
ஒட்டுவனோ? பலகாலும் உழன்றேன்;
சேம்பினோடு செங்கழு நீர் தண் கிடங்கில்-
திகழும் திரு ஆரூர் புக்கு இருந்த தீவண்ணர் நீரே;
காம்பினொடு நேத்திரங்கள் பணித்து அருள வேண்டும்
கடல் நாகைக்காரோணம் மேவி இருந்தீரே! .

பூண்டது ஓர் இள ஆமை; பொருவிடை ஒன்று ஏறி,
பொல்லாத வேடம் கொண்டு, எல்லாரும் காணப்
பாண் பேசி, படுதலையில் பலி கொள்கை தவிரீர்;
பாம்பினொடு படர் சடை மேல் மதி வைத்த பண்பீர்;
வீண் பேசி மடவார் கை வெள்வளைகள் கொண்டால்,
வெற்பு அரையன் மடப்பாவை பொறுக்குமோ? சொல்லீர்

காண்பு இனிய மணி மாடம் நிறைந்த நெடுவீதிக்
கடல் நாகைக்காரோணம் மேவி இருந்தீரே! .

விட்டது ஓர் சடை தாழ, வீணை விடங்கு ஆக,
வீதி விடை ஏறுவீர்; வீண் அடிமை உகந்தீர்;
துட்டர் ஆயின பேய்கள் சூழ நடம் ஆடிச்
சுந்தரராய்த் தூ மதியம் சூடுவது சுவண்டே?
வட்டவார் குழல் மடவார் தம்மை மயல் செய்தல்
மா தவமோ? மாதிமையோ? வாட்டம் எலாம் தீரக்
கட்டி எமக்கு ஈவது தான் எப்போது? சொல்லீர்
கடல் நாகைக்காரோணம் மேவி இருந்தீரே! .

மிண்டாடித் திரி தந்து, வெறுப்பனவே செய்து,
வினைக்கேடு பல பேசி, வேண்டியவா திரிவீர்;
தொண்டாடித் திரிவேனைத் தொழும்பு
தலைக்கு ஏற்றும் சுந்தரனே! கந்தம் முதல் ஆடை ஆபரணம்
பண்டாரத்தே எனக்குப் பணித்து அருள வேண்டும்;
பண்டு தான் பிரமாணம் ஒன்று உண்டே? நும்மைக்
கண்டார்க்கும் காண்பு அரிது ஆய்க் கனல் ஆகி நிமிர்ந்தீர்
கடல் நாகைக்காரோணம் மேவி இருந்தீரே! .

இலவ இதழ் வாய் உமையோடு எருது ஏறி,
பூதம் இசை பாட, இடு பிச்சைக்கு எச்சு உச்சம் போது,
பல அகம் புக்கு, உழிதர்வீர்; பட்டோடு சாந்தம்
பணித்து அருளாது இருக்கின்ற பரிசு என்ன படிறோ?
உலவு திரைக் கடல் நஞ்சை, அன்று, அமரர் வேண்ட உண்டு
அருளிச் செய்தது, உமக்கு இருக்க ஒண்ணாது இடவே;

கலவ மயில் இயலவர்கள் நடம் ஆடும் செல்வக்
கடல் நாகைக்காரோணம் மேவி இருந்தீரே! .

தூசு உடைய அகல் அல்குல்-தூமொழியாள்
ஊடல் தொலையாத காலத்து ஓர் சொல்பாடு ஆய் வந்து,
தேசு உடைய இலங்கையர் கோன் வரை எடுக்க அடர்த்து,
திப்பிய கீதம் பாட, தேரொடு வாள் கொடுத்தீர்;
நேசம் உடை அடியவர்கள் வருந்தாமை அருந்த,
நிறை மறையோர் உறை வீழிமிழலை தனில் நித்தல்
காசு அருளிச் செய்தீர்; இன்று எனக்கு அருள வேண்டும்
கடல் நாகைக்காரோணம் மேவி இருந்தீரே! .

மாற்றம் மேல் ஒன்று உரையீர்; வாளா நீர் இருந்தீர்;
“வாழ்விப்பன்” என ஆண்டீர்; வழி அடியேன், உமக்கு;
ஆற்றவேல்-திரு உடையீர்; நல்கூர்ந்தீர் அல்லீர்;
அணி ஆரூர் புகப் பெய்த அரு நிதியம் அதனில்-
தோற்றம் மிகு முக்கூற்றில் ஒரு கூறு வேண்டும்;
தாரீரேல், ஒரு பொழுதும் அடி எடுக்கல் ஒட்டேன்;
காற்று அனைய கடும் பரிமா ஏறுவது வேண்டும்
கடல் நாகைக்காரோணம் மேவி இருந்தீரே! .

மண்ணுலகும் விண்ணுலகும் உ(ம்)மதே ஆட்சி;
மலை அரையன் பொன் பாவை, சிறுவனையும், தேறேன்;
எண்ணிலி உண் பெரு வயிறன் கணபதி ஒன்று அறியான்;
எம்பெருமான்! இது தகவோ? இயம்பி அருள் செய்வீர்!
திண்ணென என் உடல் விருத்தி தாரீரே ஆகில்,
திருமேனி வருந்தவே வளைக்கின்றேன்; நாளை,

"கண்ணறையன், கொடும்பாடன்" என்று உரைக்க வேண்டா
கடல் நாகைக்காரோணம் மேவி இருந்தீரே! .

மறி ஏறு கரதலத்தீர்; மாதிமையேல் உடையீர்;
"மா நிதியம் தருவன்" என்று வல்லீராய் ஆண்டீர்;
கிறி பேசி, கீழ்வேளூர் புக்கு, இருந்தீர்; அடிகேள்!
கிறி உம்மால் படுவேனோ? திரு ஆணை உண்டேல்,
பொறி விரவு நல் புகர் கொள் பொன் சுரிகை மேல் ஓர்
பொன் பூவும் பட்டிகையும் புரிந்து அருள வேண்டும்;
கறி விரவு நெய்சோறு முப்போதும் வேண்டும்
கடல் நாகைக்காரோணம் மேவி இருந்தீரே! .

"பண் மயத்த மொழிப் பரவை சங்கிலிக்கும் எனக்கும்
பற்று ஆய பெருமானே! மற்று ஆரை உடையேன்?
உள் மயத்த உமக்கு அடியேன் குறை தீர்க்க வேண்டும்;
ஒளி முத்தம், பூண் ஆரம், ஒண்பட்டும், பூவும்,
கண் மயத்த கத்தூரி, கமழ் சாந்தும், வேண்டும்
கடல் நாகைக்காரோணம் மேவி இருந்தீர்!" என்று
அண் மயத்தால் அணி நாவல் ஆரூரன் சொன்ன
அருந்தமிழ்கள் இவை வல்லார் அமர் உலகு ஆள்பவரே .

திருச்சிற்றம்பலம்

# ஆசிரியரின்

# மக்கள் மனம் கவர்ந்த பிற நூல்கள்.




இந்த புத்தகங்களை, ஆன்லைனில்,

அமேசான், விக்கிமீடியா, மின் நூலகம் மற்றும் ஆடியோ புத்தகமாக Channel G podcastல் கேட்கலாம்.




இந்த புத்தக கட்டமைப்புக்கு
பணம் தந்து உதவலாம்.
இது இன்னும் புத்தகம் வெளிவர
ஊக்கம் அளிக்கும்.

# ஆசிரியர் குறிப்பு

விசு அய்யர், தமிழ்நாட்டில் உள்ள வீரம் செறிந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் மாவட்டத்தில், சிவகெங்கை சீமையில் இந்துக்களால் சிறப்பாக கொண்டாடப்படும்



ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி நன்னாளில், இன்று உலக எழுத்தறிவு தினமாக கொண்டாடப்படும் தினத்தில் தோன்றியவர்.

வரி சட்டத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். பள்ளி நாள் முதல் தொடர்ந்து சிறந்த மாணவனாக தேர்ந்து எடுக்கப்பட்ட இவர் பன்மொழி திறமை பெற்றவர். இவர் இந்திய அளவிலான நினைவு திறன் போட்டியில் பரிசு பெற்றவர். தேசிய அளவிலான அதிவேக தட்டச்சு போட்டியில் வெற்றி பெற்றவர். “சித்தாந்த ரத்னா”, “திருவருட்செல்வர்”, “கைரேகை கலைஞன்” போன்ற இவர் பெற்ற பாராட்டுக்களும் நன்மதிப்பும் பெருமைக்கு உரியன.

இன்று வரை உண்மையான பிரம்மச்சரிய வாழ்க்கையில், உணவிலும், உணர்விலும் இயற்கையோடு இனைந்து வாழும் சீரிய ஒழுக்கத்தை கொண்டவர். பெரியபுராணம், திருக்குறள், மற்றும் சைவ திருமுறைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர் சமய இலக்கியங்களில் பல ஆய்வு கட்டுரைகளை பதிப்பித்து உள்ளார்.

பன்முக திறமை கொண்ட இவர் எழுதிய சோதிடம், மற்றும் அது அல்லாத புத்தகமும், வார இதழில் எழுதும் தொடர் கட்டுரைகளும் வாசகர்கள் நெஞ்சத்தை கிள்ளி செல்லும்.

சென்னை அரிமா சங்கம், சென்னை சுழற் சங்கம், அறிதுயில் சங்கம் மற்றும் குடும்ப நற்பணி மன்றம் போன்ற பல இடங்களில் பல்வேறு தலைப்புகளில் உரை நிகழ்த்தி உள்ளார்.

உடலாலும் உள்ளத்தாலும் சீரிய ஒழுக்கத்தினாலே இன்றும் சொல்லிலும் செயலிலும் இளைஞனாகவே இருக்கின்றார். சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றி, நடைமுறை வாழ்க்கையிலும் ஒரு ஒழுக்க முறையினை செயல்படுத்தும் இவர் கையில் திருக்குறளும், பையில் திருநீறும், மெயில் உருத்திராக்கமும் இருக்கும் என்பதே இவரின் எளிய அடையாளம்.

